உ

சிவமயம்.

ஸ்ரீ தாண்டவ மூர்த்தி விநாயகர் துணை.

கானூர்

# ஸ்ரீ பிரளயவிடங்கேசர்

பேரிற்பாடிய

# தோத்திரப்பாக்களும்,

## திருப்பரங்குன்றம், ஸ்ரீ முருகன்

பேரிற்பாடிய

# காவடிச்சிந்தும்



"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"


இயற்றியவர் :

**இராஜ. சேவகப்பெருமாள்பிள்ளை அவர்கள்**

கானூர்.

இராமநாதபுரம் மாவட்டம்.




சுபகிருது 1962.

ஸ்ரீ முருகன் துணை.

# மாலை மாற்று வெண்பா







இயற்றியவர்

ஸ்ரீமான் சேவகப்பெருமாள் பிள்ளை, கானூர்.

உ

# அஷ்ட நாகபந்த வெண்பா

மூலமுத லாதார மோருறிற் றீபானு
ஆலால தீவாமோ தாவதவ-மேலதி
ஞால கமவவீத ழாயிந்தா வாவதக
ணீலதா வைவகா நீ

இயற்றியவர்
ஸ்ரீ மான் இராஜ. சேவகப்பெருமாள் பிள்ளை
கானூர்.



உ

ஸ்ரீ தாண்டவ விநாயகர் துணை.

காநூர், ஸ்ரீ பிரளயவிடங்கேசுரர் பேரிற் பாடிய

# தோத்திரப்பாக்களும்,

திருப்பரங்குன்றம், ஸ்ரீ முருகன் பேரிற் பாடிய

# காவடிச் சிந்தும்.

இஃது

இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கைச் சமஸ்தானத்தைச் சேர்ந்த காநூர்க் கிராமம் கொந்தள வேளாள குலதிலகரும் சைவ சிகாமணியும் இருமொழிப் புலவரும் செல்வந்தருமாகிய ஸ்ரீமான் **இராஜகோபால் பிள்ளை** குமாரர் ஸ்ரீமான் **சேவகப் பெருமாள் பிள்ளை** அவர்களாற் பாடப்பெற்றது.

இத்தோத்திரப்பா மஞ்சரியை இந்நூலாசிரியராகிய சேவகப்பெருமாள் பிள்ளையவர்களின் புத்திர, புத்திரிகளின் வம்சத்தாரர்களாகிய,

மகா-ா-ா-ஸ்ரீ சே. தி. இராஜகோபால் பிள்ளை,
,, சே. தி. சுந்தரம் பிள்ளை,
,, சுப. திருவேங்கடம் பிள்ளை என்ற சூடாமணிப்பிள்ளை,
,, சுப. கிருஷ்ண பிள்ளை,
,, பா. தியாகராஜ பிள்ளை என்ற குருசாமி பிள்ளை.

இவர்களால், அச்சுவாகனம் ஏற்றப்பெற்றது.



சுபகிருது சித்திரை } 1962.

# தோத்திரப்பா மஞ்சரி

## பதிப்புரை.

---

மஞ்சரி என்பது பூங்கொத்துப் போன்று பல பதிகங்களை யும், சில விடுகவிகளையும் சேர்க்கப்பெற்றுள்ளது. இம் மஞ்சரியை இயற்றியவர் பாண்டிநாட்டிலுள்ள சிவகங்கைச் சமீனைச் சார்ந்ததும், காவளமும், மாவளமும், கோவளமும் நாற்றிசையும் சிறந்து விளங்குவதுமாகிய கானூரில், கொந்தள வேளாளர் குலத்தில், செல்வச் சீமானாகிய இராஜகோபால் பிள்ளையவர்கட்குத் திருக்குமாரராகப் பிறந்தவர் சேவகப்பெருமாள் பிள்ளையவர்கள். இவர் வெற்றிவேற் கவிராயரிடத்துச் சில நூல்களைப் பாடங்கேட்ட தோடு அமையாது வேம்பத்தூர்ச்சங்க வித்வான்களிலொரு வராகிய மகாவித்வான், சிலேடைப்புலி பிச்சுவையரவர் களுடன் மிக நெருங்கிப் பழகித் தமிழ் நூலுணர்ச்சி, வடமொழி நூலுணர்ச்சி பெற்றவர். சைவ, வைஷ்ணவம் என்று மத வேறுபாடு கொள்ளாது சமத்துவப்பற்றுடை யவர். மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமை வகித்துத் தமிழ் வளர்த்த திருப்பரங்கிரிக்குமரன் மேல், மிகமிகப் பற்றுடை யவர். ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி ஆகிய நால்வகைக் கவிகளிலும் மிக்க தேர்ச்சியுடையவர் என்பது இம் மஞ்சரியில் பரக்கக்காணலாம். ஸ்ரீ மதுரவல்லி துதி, சோமசுந்தரேசர் துதி, சொக்கலிங்கர் பதிகம் இவற்றைப் படிக்கப் படிக்கப் பக்திச்சுவை சொட்டச் சொட்டக்காணலாம் என்பதுண்மை. இவருக்குச் சிவபெருமானே கனவில் தோன்றி அடிஎடுத்துக் கொடுக்கப் பாடியதாகக் கர்ன பரம்பரைச் செய்தியுள்ளது. தெய்வப்புலமையுடையார்க்கு, யாம் எடுத்துக்கூறும் பெருமையாதுள்ளது? இன்றும் ஷெ யார்களின் சந்ததியில் வந்தவர்களும் நூலாராய்தலிலும்

கவிகளியற்றுவதிலும், வாசகசாலைகள் வைத்துப் புதினத் தாள்களை வருவித்துப் படிப்பதிலும் பொழுதுபோக்கி வருகின்றார்கள். இவர்களின் முயற்சி மென்மேலும் ஓங்குக.

இப்பாடற்றிரட்டுகைகளியற்றிய காலம் சுமார் சற்றேறக் குறைய 100 ஆண்டுகளுக்கு மேலாகும். இப்பாடற்றிரட்டுகைகள் ஏட்டுச்சுவடியிலிருந்துள்ளன. காலம் கடந்துகொண்டே போகின்றதே அச்சுவாகனம் ஏற்றப்பெறவில்லையே யென்று, பெண் வழிச் சந்ததிதாரராகிய மகா-௱-௱-ஸ்ரீ சுப. சூடாமணிப்பிள்ளையவர்கள் மிக்க, கவலைகொண்டிருந்து பின் அக்கவலை மாறும்பொருட்டு ஆண் வழித் தோன்றலாகிய இராஜகோபால் பிள்ளை, சுந்தரம் பிள்ளையிவர்களுடன் கலந்து என்னை, அவ்வூர்க்குத் தருவித்து இருக்கச் செய்தும், சுவடிகளைப்பார்த்து எழுதச் செய்தும் ஊக்குவித்தார்கள். அவர்களுடையயுரிமை, அன்பைக்கொண்டு யானும் அவ்வாறே செய்து அச்சுவாகனத்தேற்றிவைத்துப் புத்தகரூபமாக வெளிவரச் செய்துள்ளேன். எல்லாம் வல்ல மதுரைச் சோமசுந்தரப் பெருமான் திருவருட்டுணைகொண்டு, இவ்வூராரும், இந்நூல் படிப்பாரும் மென்மேலும் சகல சம்பன்னர்களாக வாழ்ந்துவர வாழ்த்துகின்றேன். எம்பெருமானாகிய தாண்டவ விநாயகன் திருக்கருணை பாலிப்பானாக.

இங்ஙனம்,
வேம்பத்தூர்
சிலேடைப்புலி **பிச்சுவையரவர்கள் குமாரர்**
**பாஸ்கரையர்.**

வேம்பத்தூர்ச் சங்க வித்துவான்களில் ஒருவரும்,
முகவை மன்னரால்
சிலேடைப்புலி யென்னும் பட்டம் பெற்றவருமாகிய
பிச்சுவையரவர்கள் குமாரரும்,
சேதுபதி உயர்தரக் கலாசாலை, மதுரைக் கல்லூரி உயர்தரக்
கலாசாலைகளில் தலைமைத் தமிழாசிரியராகவிருந்து
பணியாற்றி வாழ்ந்து வருபவருமாகிய
பாஸ்கரையரவர்களால் பாடப் பெற்ற

## சிறப்புப் பாயிரச் செய்யுள்.

---

பூந்துணர் பொதுளித் தேன்பொழி மலர்நிறை
வார்ந்தடஞ் சோலை தாந்திகழ் கானூர்ப்
பதியார் கொந்தள மதியார் செழியன்
துதியார் கற்பக நிதியார் சைவத்
துறையும் பன்னிரு முறையும் புகலும்
நிறையும் மதிசேர் பொறையும் பல்கலைத்
திறமும் படைத்த வுரமார் தரத்தன்
அறமுங் கொடையும் உறவாக் கொண்டோன்
நாற்கவி ஆதிதம் பாற்கொளக் கண்டோன்
நூற்கவி தம்முளத் தூற்றெனச் செய்தோன்
அட்டதிக் குள்ளோ ரிட்டப் படியே
அட்டாவ தானந் திட்டமாய்ச் செய்தோன்
பூதிருத் திராக்கம் ஆதிப் பொருளெனக்
காதில் மார்பில் தாதிவர் கண்டிகை
பூண்டுபூ சைமே லாண்டு வந்தோன்
வேண்டும் பொருளை யாண்டும் ஈந்தோன்
நெய்பால் தயிரிள நீர்பஞ் சாமிர்தம்
ஒய்யிசை வண்டுகள் மொய்மல ரவைகொடு
உய்வகை யாகமங் கைவரப் பெறுமுறை

தெய்வ சிகாமணி செய்யபி ஷேகன்
கணபதி முதற்சர வணபதி யுரகர
குணபதி பூத கணபதி அடியார்
தாமியற் றும்பாச் சேமித் தார்ந்தோன்
மாமின் மகிழ்சிவ காமி நாயகன்
பிரளய விடங்கப் பெருமான் மீதில்
தரள மணியை யுறழ்சொற் பதிகமும்
மதுரச் செஞ்சொல் லதுமிகச் சோலையார்
மதுரைச் சுந்தரர் வதுமீ ஞக்ஷி
மேற்சொல் நூலொடன் பாற்சில பாக்களும்
நாற்றிசைப் பாவலர் போற்றச் செய்தவன்
பெருமைச் சேவகப் பெருமாள் பிள்ளை
அருமைச் சுதனர் அறிவுச் சுடர்மிகத்
தருமென் தந்தை விருப்புக் குரித்தாய்ப்
பெறுமதிப் புலவத் திருவளர் செல்வனு
ஆமோ திக்கும் தாமோ தரனர்
நாமோ சொலத்தர மாமோ அன்னன்
இழைத்த தவமகன் இராஜகோ பாலனும்
தழைத்த அன்பால் அழைக்கும் தம்பியாம்
தந்தரம் உயர்த்த சுந்தரம் பிள்ளையும்
சுந்தரிப் பெண்வழி வந்து தோன்றினேன்
பீடா திபதிகள் பீடார் விற்பன
சேடா திபனுஞ் சூடா மணியெனும்
பிள்ளை யவர்களின் துள்ளு முயற்சியும்
கிள்ளை மொழிசொல் வள்ளல் கிருஷ்ணனும்
தருதியா கராசப் பெயரெனச் சாற்றும்
குருசா மிகளின் திருவடி மறவா
உருவார் மாணவக் குருவளர் கல்வியார்
குருசாமிப் பெயர்க் கோமான் சலியா
உழைப்பினு மிந்நூல் தழைக்க வச்சில்
இழைக்க வென்பாற் குழைந்துசொற் றூர்கள்
ஆகையால் விரைவில் பாகைநேர் கவிகளை
ஓகைமீக் கொண்டே வாகை சூடிடச்

செய்து முடித்தனன் தெய்வவேல் முருகன்
பெய்கரு ணையினுல் உய்வம் நாளும்
இந்நூல் மூலம் சந்ததி செம்பொருள்
சந்ததம் பெறவே வந்தனை செய்வோம்
வாழிபைந் துளவ ஆழிப் பெருமாள்
சூழிவ் வுலகில் வாழி வாழியவே.

சுபம்



வேம்பத்தூர்ச் சங்க வித்துவான்களில் ஒருவரும்
இராமநாதபுரம் சிவகங்கை யென்னும் உபய சமஸ்தான
வித்துவானுமாகிய நிமிஷகவி சிலேடைப்புலி
ஸ்ரீ பிச்சுவையரவர்களின் குமாரர்
பிரமஸ்ரீ நடேசபாரதியவர்கள் பாடிய

# சாற்றுக் கவி.

---

*பதினான்கு சீர்க்கழில் நெடிலாசிரிய விருத்தம்.*

மாமேவு நிம்பபுர மானகா னூரிலே
வாழும் வேளாளர் போற்ற
வரமுதவி வருகின்ற தாண்டவ கணேசர்
திருமலரடி யிலன்பு கொண்ட
வள்ளலென வேகூறு மிராஜகோ பால்பிள்ளை
மகனெனச் சொல்ல வுலகில்
வந்திலகு சேவகப் பெருமா ளெனும்புலவன்
மதுரை மீனாட்சி பதிகம்

பாமேவு கூடலம் பதிசோம சுந்தரன்
பாதமற வாய்ச் சிந்தையால்
பாவாணர் கொண்டாட வோர்பதிக முந்திருப்
பரங் குன்றிலார் முருகன்மேல்
பத்தியுட னேகாவ டிச்சிந்து பாடிவெகு
பதிகங்கள் மாலை சொலியும்
பாரிலுயர் பிரளய விடங்கர்மே லும்பதிகம்
பத்தியாய்ச் செய்த பின்னர்

பூமேவு திருமாது புகல்சினு வாசனும்
போற்றவே கவி பாடியும்
பொன்மருவு கொந்தளவே ளாளர்வா மூரா று
புகழ்பாண்டி நாட்டி னிற்குள்
பொருள்மேவு கானூர டுத்தகல் லூருணி
பொன்பெரிய கோட்டை தெக்கூர்
பூமிபுகழ் சிறுகுடியைச் சேரன்னி யேந்தலும்
பொற்புமிகச் சேர்ந்த நகரும்

காமேவு கொந்தளவே ளாளர்வாழ் குடியெலாங்
கண்யமாய் வாழ்க வென்றே
கருதிவரு பிரளய விடங்கருமை சேர்கோயில்
கற்பாந்த கால மோங்கக்
கருங்கல்லி னுற்றிருப் பணிசெயச் செம்பொனருள்
கானூர்க் குபேரர் யாரும்
காசினியி லெங்நாளும் சந்ததி தழைத்திடக்
கவிசொனேன் வாழி மாதோ.

சுபம்



வேம்பத்தூர் அஷ்டாவதானி.
சா. ஆ. சௌந்திரபாரதியவர்களின் குமாரரும்
தமிழ் வித்துவானுமாகிய
அம்பிகாபதி பாரதி பாடிய

# சாற்றுக் கவிகள்.

1. மங்களஞ்சார் கானூரில் வாழ்சேவ கப்பெருமாள்
சங்கத் தமிழுணர்ந்த சற்சனர்க — ளெங்கெங்கும்
மெச்சவைத்தான் மேன்மைப் பிரளயவி டங்கர்மேல்
இச்சைப் பதிக மிதை.

2. சுந்தரமார் சோலைதுதை மதுரை மன்னிவளர்
சுந்தரர்க்கு மோர்பதிகம் சொல்லினுன் — விந்தைமிகு
மாங்கனி தேனெனவே மாநிலத்தோர் எல்லாரும்
பாங்குடனே கூறவன் பாய்.

3. அன்பர்க்குச் செல்வமருள் அன்னைமீ னும்பிகைக்கும்
இன்பப் பதிக மிசைத்தனனுல் — முன்புமதி
பாற்கடலார் மாவமுதம் பாருக்குள் வந்ததென
நாற்கவிஞர் போற்ற நயந்து.

4. இந்தப் பதிகங்கள் எல்லாருங் கற்றுணர்ந்து
சந்ததிக ளோங்கவச்சிற் ருன்பதித்த — விந்தையார்
முத்துராஜ பிள்ளை முதலாளி சுந்தரனும்
வித்தகரும் வாழிமென் மேல்.

உ

ஸ்ரீ தாண்டவ விநாயகர் துணை.



# கானூர் ஸ்ரீ பிரளய விடங்கேசர்

# தோத்திரப்பாக்கள்.



## காப்புச் – செய்யுள்.

பேரோங்குங் கானூர்ப் பிரளயவி டங்கர்மேற்
சீரோங்கும் பாப்பதிகஞ் செப்புதற்குப்—பாரோங்குந்
தாண்டவ மூர்த்தியெனும் தந்திமுகத் தைந்துகரத்
தாண்டவனே முன்வந் தருள்.

---

## நூல்.

1. சீர்பெரு கங்கைத் திகழ்சடை முடியாய்த்
திருவெண்ணீ றிலங்கிய நுதலுஞ்
சேர்திரு நயனு சிவந்தொளிர் வதனு
சிவகாமி யம்மையோர் பாகா
மார்பணி முன்னூல் மான்மழுக் கரனே
மறைச்சிலம் பொலிமலர்ப் பாதா
ஆர்வமா நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

2. அருண்மய வடிவே அதீதமா யெல்லா
அகிலமும் அயின்ற ஐந்தருவே
சுருதியின் மேலாய்த் துரியமுங் கடந்த
சோதியே சிற்சுட ரொளியே
தருவெனு யோக சாதன ஞான
சதுஷ்டய மருள் தயா பரனே
அரியநன் நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

3. உத்தம சயம்பி னுத்தம தரமா
யுதித்துமேற் றத்துவ மான
சுத்தவத் விதமே சுயம் பிரகாசச்
சோதியே சுயம்புவாய் முளைத்த
முத்தனு மூல விலிங்கமே மறையின்
முடிவினின் வருமுதற் பொருளே
அத்தனே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

4. ஆதியும் நடுவு மந்தமற் றென்று
யவ்வுயிர்க் குயிர றி வாகிச்
சோதியாய் நிறைந்த சுகாதீத வடிவே
சொற்பொருட் கடங்கிடாச் சுயமே
நீதிமா தவர்க்கு ஞானசா தனநன்
னிலைமையு மருளுநிர் மலனே
ஆதரா நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

5. எப்புவி தனிலு மிணையிலா வுன்னை
யியாதொரு பாவனை யியற்றி
ஒப்பனைக் கெனினு மோரிலை மலர்கொண்
டுகந்து பூசிக்கு முள்ளன்பால்
தப்பற வெல்லாத் தவமுமீண் டளிக்குந்
தயாநிதி நீயெனச் சார்ந்தேன்
அப்பனே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

6. நனிவுறு தசையும் நாவினி தோர்ந்து
நாயனீ ரமுதுசெய் தருளென்
றினியன சொலியும் இணைவிழி யிலாதன்
னிரண்டு கண்ணப்பு கண்ணப்பா
கனிவுகண் டருமைத் தோன்றலே நில்லு
கண்ணப்ப கண்கதி பெறுவென்
றணையனே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

7. கவனமா சித்தர் கருதுகண் மணியே
கதிசிந்தா மணிக்கருள் தருவே
எவரெவ ரெதுவா யிசைத்தன ரிதயத்
தெய்திய பாவகப் படியே
உவமையில் பதியாய் சித்தசத் தில்லா
துருவரு வுபயமாம் ஒளியே
அவனிசூழ் நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

8. ஆர்வமே யோங்கு மருட்பிர வாகத்
தமிர்தமே ஆனந்த மயமாய்
எர்சுகா தீதத் தப்புரத் தப்பா
லிதுவுரு விதுநிலை யெனவே
ஓர்விலா தியாதொன் றெப்புயர் வில்லா
வொளியினுக் குள்ளொளி யுணர்வே
ஆருயர் நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

9. கன்னலே யமுதே கசிந்தசர்க் கரையே
கண்டெனக் கனிந்த முக்கனியே
என்னிட மிருந்தே யென்னையு மறியா
திருவினை நடத்திடு மிறையே
உன்னைநா னறிந்துள் ளுணர்வுடன் பூசித்
துயர்பதம் பெறுவதெந் நாளோ
அன்னையே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

10. மாதவம் புரியும் மிருகண்டு மகிழ
மகவுதந் தெமனணு காமல்
தீதில்மார்க் கண்டன் செய்சிவ பூசை
சிறந்திடச் சிரஞ்சீவி தந்தாய்
தோதிலா வமிர்தந் தனில்விட மகற்றிச்
சுரர்தமக் கீய்ந்திடுந் துணையே
ஆதியா நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

11. இன்னிலம் புரக்கு முன்னமே தோன்றி
யெழுந்தருள் சுயம்புவா மிறையே
தென்னவன் வீரமார் பாண்டியன் மந்திரி
செய்க கொந்தள குலதிலகன்
மன்னுசுந் தரசா மந்தனுற் செய்த
மாமணி மண்டபம் வளரும்
அன்னையே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

12. தென்னவன் வீரமார் பாண்டியன் மேற்
சேதியர் கோன்றனைச் செயிக்கச்
சொன்னவிந் நகரான் கொந்தளர் குலத்தோன்
சுந்தர சாமந்த னென்போன்
தன்னையே சேனை கொள்கென விடுத்த
தனந்திருப் பணிசெயக் கதிதந்த
அன்னையே நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

13. கருதிய வடியார் குறிப்பறிந் தருளுங்
கற்பகத் தருவே கருணை
பெருகிய வடிவே சுடரினைத் தூண்டிப்
பெருக்குமா வெலிக் கரசாளத்
திரிபு வனமுமே லளித்தருள் தேவ
தேவனே சிவபெரு மானே
அரகர நிம்பைப் பிரளய விடங்க
வமலனே யென்னையாண் டருளே.

சுபம்.



# தோத்திரக் கவிகள்.

1. ஆசார மாலயஞ் சார்சினஞ் சேர்செருக் காசையுற்று
ஆசார மாயுரங் கற்கோநிம் பேசன் அடிதொழுது
ஆசார மானநன் னூல்கல்வி கேள்வி யறிந்துசைவ
ஆசார மாகிவருகவென் றேசிவ ஆக்ஞையதே.

2. கோவிலே யாகக் கொளுங்கானூ ரினுளுங் குலவுசிவன்
கோவிலே யாகமச் சீர்பணிந் தேகல்வி கொள்வதல்லால்
கோவிலே யாவென்று கூவுத னன்றன்று கூறுவதேல்
கோவிலே யாவங்கு கூறுவீர் உமதுகுறை சொல்லியே.

3. நடைவழியே திரிந்துழல்வீர் நாதாபிரளீசா நயந்தா சார
நடைவழியே யிருந்துதிரு விளையாடல் முதலான [நற்புராண
நடைவழியே கருதுற்று லறம்பொருளின் பம்வீடு [நான்குமான
நடைவழியே புருஷார்த்தம் பெறுவீர்காண் [இதுநாடுநிம்பை நகருளாரே.

4. நாயன் கொடுத்தபெயர் என்றவுரை யுஞ்சோழ
தேயமா வென்றுஞ் சிறுமையிகழ் — தூயதெய்வ
மாக்குமென்ற சொல்லுநிச மாக்கியவாமானங்
காக்குமென்றும் மீனுள்பர கன்.

5. நாதாதெய் வானைவள்ளி நண்பா இலங்குசீர்
வேதாக மந்தெளிந்த வேலனே — போதஞ்செய்
சுப்ரமண்ய தேசிகா சுயம்பாட நீயெனக்குச்
செப்புவாய் சேந்தனவ னே.

6. நாற்பதோ டைம்பதுநாள் நான்பாடு பட்டுநட்ட
கேப்பையோ நன்றாய்க் கிளைவெடித்துச் — சாப்பாடு
மாடுகன்று மேயாமல் வந்தவிட்டி கொய்யாமல்
கோடுகண்டு வையுங் குகா.

சுபம்.



## திரிபங்கி யென்னும்

# மும்மண்டில வெண்பா.



(1) சீலமா வாகனனே சீதரது ரைச்சாமி
நீலா தியாகமனு நீததித—யாலாவ
னேகாசை மாதுதனே நேசமுக னேமகிழ்ந்து
நீகாபூ மாதுமுக னே.

(2) வாகனனே சீதரது ரைச்சாமி நீலாதி
யாகமனு நீததித யாலாவ—னேகாசை
மாதுதனே நேசமுக னேமகிழ்ந்து நீ
மாது முகனேகா பூ.

(3) சீதரது ரைச்சாமி சீலாமா வாகனனே
நீததித யாகமனு நீலாதி—மாதுதனே
நேசமுக னேமகிழ்ந்து யாலாவ னேகாசை
நேகமுது மாபூகா நீ.



சுபம்.



உ

ஸ்ரீ தாண்டவ மூர்த்தி விநாயகர் துணை.







திருப்பரங்குன்றம்

# ஸ்ரீ முருகன் பேரிற் பாடிய

# காவடிச்சிந்து.



உ

ஸ்ரீ முருகன் துணை.

# காவடிச்சிந்து.

---

## காப்புச் – செய்யுள்.

*வெண்பா*

பாவலவர் போற்றும் பரங்கிரிவாழ் சண்முகன்மேல்
தேவமுதாய்க் காவடிச் சிந்துதனை—யாவலாய்நான்
சிந்தைமகி ழச்செப்பச் சித்தி விநாயகன்றன்
கந்தமிகு செஞ்சரணங் காப்பு.

---

## நூல்.

தனனதன தனனதன தனன — தந்த
தனனதன தனனதன தனனதன தனன

காருலவு திருப்பரங் கிரியில் — வாழுங்
கந்தன்மே லானந்தக் களிப்பையான் கூற

சீரிலகு குடகவயி றுடைய — அருள்
சித்திவி நாயகர்பாதம் நித்தியமற வேனே

மேகநிற வண்ணன்மால் மருகன் — செந்தி
வேலவர்மே லானந்தக் களிப்பையான் கூற

கோகனக மலர்வதன உமையாள் — ஈன்ற
குஞ்சர முகவனிரு செஞ்சரணந் துணையே

அதிமதுர மிர்துவசன லோலன் — மிக்க
அறுமுகன்மே லானந்தக் களிப்பையான் கூற

சதுர்மறையின் முடிவிலக லாமல் — வாழுஞ்
சரஸ்வதிதன் பதமுமென திதயமற வேனே

சரவணையி லுருபவ தரித்த — கந்த
சாமிமே லானந்தக் களிப்பையான் கூற

அரவுமதி யறுகுநதி யணியும் — பிரளயவ்
விடங் கீசர்மல ரடிகள்மற வேனே

அண்டர்பணி கின்றபரங் கிரியில் — வளரும்
அறுமுகன்மே லானந்தக் களிப்பையான் கூற

விண்டணைய காயாம்பு வண்ணன் — திரு
வேங்கிடவ ரிருபதமென் னுளுமற வேனே

மருவாரு நீபமலர் மார்பன் — வள்ளி
மகிழ்நன்மே லானந்தக் களிப்பையான் கூற

திருமேவு கூடல்வளர் சொக்க — லிங்க
தேவிமீ னாக்ஷிபதஞ் சிந்தைமற வேனே

மகுடமுடி மன்னர்தொழு தேத்துங் — கௌரி
வல்லவ மகாராஜன் வளர்மேவு புவியில்

தகையிலகு திருமாது மகிழும் — நிதிசேர்
தனதனழ காபுரியை நிகர்கானூர் வளரும்

சிற்றறிவு ளோன்வெற்றி வேலன் — மகிழ்ந்து
செப்பியவிக் கவிதையு மெப்படிப்போ லென்னில்

உற்றவொளி நற்றரள முன்பு — பளிங்கில்
உவமையென வேதெளிந் துரைசெய்தல் போலும்

சந்திரனை நிகரென்று விண்ணில் — உற்ற
தாரகையி லொன்றுவொளி தான்காட்டு மதுபோல்

சிந்தைமகிழ் கலைவல்லோர் முன்பு — தமியேன்
செப்பியவிக் கவிதையுமக் கொப்பெனவே கொள்வீர்

மந்திர சடாக்ஷரத யாளன் — வள்ளி
மையலுறு கனகவொளி வரையணைய தோளன்

சுந்தரி தவத்திலுறு பாலன் — அடியார்
துன்பவினை வன்கலி துரத்தும்வடி வேலன்

அவனியந் தரசொர்க்க மூன்றும் — ஆளும்
அசுரர்கிளை யுடன் மடிய மயிலேறி கொடியில்

சிவமுணருந் தேவர்சிறை மீட்டு — வள்ளி
தெய்வானை தன்னைமணஞ் செய்தவடி வேலன்

வனசமல ருறையுமயன் குலிச — னறிய
மாதவர்க ளுடன்மிக்க வானவர்கள் சூழ

முனிவருடன் ரிஷிகளடி பரவ — கும்ப
முனிவனுக்குத் தமிழுரைத்த முரு கேசன்

சரஹண பவாமுருகா வென்று — வெண்ணிர்
சாற்றுமடி யார்கள் வினை மாற்றிவிட வென்று

உரகபட நெறியுமயில் மீதில் — வந்து
வுறுபிணிகள் தீர்க்குமறு முருகன்வளர் கிரிக்கு

மாகமுக டளவுபொழில் சூழும் — கானூர்
வளருந்திரு வேங்கடவ சீலனருள் பாலன்

யோகமிகு சுப்பிரமணிய தீரன் — தனக்கு
உத்தரவு காவடி யெடுக்கவர மருள்வோன்

அலையாழி துயிலுமால் மருகன் — மிக்க
அறுமுகவன் உரைசெய்ய அன்பொடு நினைந்து

மலைதேடிக் காவடி யெடுத்துக் — கொண்டு
வாரசிங்கார மதை வழுத்துவேன் தோழி

தேசிக மிலங்குமுரு கேசன் — சரணஞ்
சித்தம்வைத் துதிகபய பக்தியுட னெழுந்து

வாசமலர் வைகைநதி மூழ்கி — போற்றி
மந்திரமொடு வெண்ணீறுந் தளமாகச் சாற்றி

காவிகா யாசம் புனைந்து — மிக்க
கண்டத்தி லுருத்திராக்ஷம் கனமாகப் பூண்டு

கூவிளம் அலரிசெவ் வந்தி — மஞ்சள்
கொன்றைநறு முல்லைகுட மல்லிமலர் சாற்றி

மதுரமிகு மலைவாழைக் கனியும் — மிக்க
மாங்கனி பலாவினொடு வடைகடலை அவலும்

சதுருடன் வெள்ளிலைபாக்குத் தேங்காய் — அடித்துச்
சாம்பிராணித் தூபமொடு தீபங் கொடுத்து

கலசமதிற் சர்க்கரை நிரைப்பீ — மிக்க
காவடியி லிருபுரமுங் கட்டிமுரு கேசன்

மலரடி தனைத்தொழுது போற்றி — மிக்க
மலேதேடி யானந்தக் களிப்புடனே வாழ்த்தி

அத்திமுக னிருசரணம் போற்றி — குமரன்
அருள்கொண்டு காவடியைத் தோள்மீதி லேற்றி

எத்திசையும் புகழ்ந்து கொண்டாட — மிக்க
எழில்மேவு காவடி யிசைந்து நின்ருட

பக்தருடன் மாதவர்நின் ருட — அடியர்
பவவினைக ளிரவிமுன் பனியெனவு மோட

சித்திரமயில் தடங்தொறு நின்ருட — மலரின்
தேனுண்டு சுரும்பினங்கள் சேர்ந்திசைகள் பாட

மத்தளம் பூரிகை தவுண்டை — மிக்க
மல்லரியுடன் மேள வாத்தியஞ் சேகண்டி

தித்தியெக் காளமொடு சங்கந் — தாரை
சின்னமொடு நாகசுரஞ் சிங்குழல் முழங்க

மலேயினுட வளமுநகர் வளமும் — நாட்டு
வளமுநதி வளமும்நில வளமிரத வளமும்

இலகுவரை யனையதன முடையீர் — பார்க்க
இன்பமுடன் வழிகூடிச் சென்றுவா தோழி

வாசமிகும் நிம்பைநகர் வாழும் — சுப்பிர
மண்யமுகில்க் காவடியின் மகிழ்வுடனே கூடி

மூஷிகவா கனைத்தொழுது சொக்க — லிங்க
முதலியார் மடத்தருகின் முன்புசென் றனரே

திகையிலகு தனவிரதி காந்தன் — மிக்க
திருவேங்கிட வேள்மடஞ் சென்றுவழி கூடி

ஜெகமெல்லாம் புகழ்திருமா னேந்தல் — ஐயன்
சேவடிபணிந்து உயர் மதகின்வழி கூடி

நத்தினங்கள் ஊர்ந்து விளையாடும் — வைகை
நதிசென்று புதுவையம் பதியுங் கடந்து

பக்தருடன் முனிவர் தபோதனரும் — நாளும்
பரவியடி பணியுமவர் பவவினைகள் தீர்க்கும்

தென்பூவை யம்பதி புகுந்து — முக்ய
தீர்த்தமொடு வைகைநதி தீர்த்தங்க ளாடி

பொன்பணியு மழகியமின் பங்கில் — வாழும்
பூவணவ ரிருசரணம் போற்றிநடந் தனரே

வாராரு தனமாதர் லோலன் — சுப்பிர
மண்யவேள் தனக்கதிக வாழ்வுதரும் வேலன்

ஈரா று பன்னிருகை வேலன் — எங்கள்
ஈசனுக் குபதேசம் செய்தகுரு நாதன்

பொழில்சூழும் விசையமா நகரம் — மன்னர்
புகழ்கின்ற மணவையம் பதியுங் கடந்து

எழிலிலகு சிலையின்மா நகரம் — மிக்க
இன்பமுரு புளியங் குளங்கூடி யேகி

வெற்றிசெரி விரகனூர் சென்று — பாலம்
மேவுமயி லானூருச் சாலைவழி கூடி

கொற்றவர்கள் தொழுமாரி யம்மன் — தெப்பக்
குளமூழ்கி மகமாயி பதமும் பணிந்து

சந்திரமுக விழிசலச மொழியாள் — மிக்க
தனுவினுத லிலகுமிரு தனகனக வரையாள்

சுந்தர மிகுந்ததிரு மகளீர் — கழனி
சூழ்ந்திலகு கூடல்வளஞ் சொல்லுவோங் கேளீர்

கந்தனரு மாவொரு பலாவும் — மிக்க
கன்னலொட ரம்பையின்காய் கனிந்துசிதை வாகி

விந்தைமிகு மடுவயல்கள் பாய்ந்து — சாலி
விண்ணடர்ந் தோங்கிவிளை வாகிமுத் தீனும்

இருபொழிலி லுறுகவி பந்தடிப்ப — கனியை
எதிர்நின்று சிலகவிக ளின்பமொடு பிடிப்ப

மருபுரையும் வனங்கிள்ளை காட்டும் — திவ்விய
வடிவிலகு கிள்ளைநிற வனமெலாங் காட்டும்

இலகுமொழிக் கழையாலை தன்னில் — சாற்றி
லெழுபுகையை முகிலெனவு மிருகுயில்க ளுறைய

மலர்மது கரங்களிசை பாட — மிக்க
மழைகால மெனவுமதி மயில்கள்விளை யாட

சலசமொடு மணிலமுளை வேளஞ் — சாலி
சசியெனவு மொழியதிக தரளமணி யீனும்

மரியலரி விரிமலர் மல்லிகையார் — முல்லை
மணமொடு வனம்பின்முகை மலரலர தாகும்

மலரதனில் மதுகர மிதிப்ப — நறவு
வைகைநதி பெருகியதி மருவவுறைந் தோடும்

பலமணியி னெடுதரள மகளீர் — சிந்து
பவளமதில் கவையடியின் பகடுரைய நடவும்

வளமகளீர் குழலிலணி மலரின் — பிரச
மடுசலதி யொடுபெருகி மகரமது வெரிபோம்

தனமதுவை மறையவர் தனக்கே — அருளுந்
தாரையொடு சலிலமதி தரணியதி லோடும்

கலிநதியி லரிவையர்கள் கூட — மிக்க
கழனிதொருங் குரவையொடு கடைசியர்கள் பாட

மலிநகரி மும்முர சொலிப்ப — நந்த
வனமதிற் குயில்கல்நல மெனவுகந் திசைப்ப

மடமாதர் வதனமதி காட்டும் — மிக்க
வானுறையு மதியறிவை வதனமது காட்டும்

தடமுலைகள் வரையெனவுங் காட்டும் — மிக்க
தடனவரை வனிதையர்கள் தனமெலாங் காட்டும்

தெரிவையர்கள் நகைமுல்லை காட்டும் — மிக்க
தேன்முல்லை பேதையர்கள் சிறுநகைகள் காட்டும்

வரிவளைகந் தரஞ்சாயல் காட்டும் — மாதர்
வடிவிலகு கந்தரங்கள் வளைசாயல் காட்டும்

குவளைமலர் நறவுகர வந்த — வண்டு
கோதையித ழதுகண்டு பேதமொடு மருளும்

நவிரமுது வதுவெனவுஞ் சாயல் — காட்டும்
மால்வரிவை நிறமெனவு மயிலியிணை பொருதும்

அயிலதுவு மரிவைவிழி காட்டும் — மாதர்
அம்பகமு டம்பிடிய தாகவே நாட்டும்

குயில்களது வனிதைமொழி சேரும் — மிக்க
கொடியிடைய மொழிகளது குயிலிசைகள் கூறும்

அன்னமென மாதர்நடை காட்டும் — மிக்க
அரிவையர்கள் எகினமென அன்பிநடை காட்டும்

கன்னியர்கள் குழலியணி காட்ட — மாதர்
கனங்குழலி னீரமது கரங்கணிறங் காட்ட

வனிதையர்கள் முகமதிய மென்ன — மிக்க
வளரரவு விடமொழுக வரிவையென மருளும்

தனுவரிவை புருவமது பொருதும் — மிக்க
தகைவனிதை புருவமது தனுவெனுவும் பொருதும்

ஆடவரி னழகுகளி லாதோர் — மிக்க
வரிமகளி னழகுநிக ரதிகவடி வுடையார்

மாடகமிலா சிரிது பேரின் — வாட்கை
மனுநிதிக் குபேரனவ னுக்கிணைய தாகும்

வானமுக டளவுகோ புரமும் — ரத்தின
மணிகள்பள பளெனவொளி யிலகுகோ புரமும்

தானவர்கள் முனிவரடி பரவும் — கூடல்
சன்னதி புகுந்துபொற் ருமரையில் மூழ்கி

திருவளரும் கோவில்வலஞ் செய்து — மிக்க
தேவிமீ னுக்ஷிபதஞ் சிந்தையில் நினைந்து

அருள்பெருகுஞ் சொக்கேசர் பதமும் — பரவி
அறுமுகவன் கிரிதேடி யன்பொடுசென் றனரே

விந்தையுறும் ஆடிவீ திகளும் — சித்திர
வீதியுடன் ஆவணி மூலவீ திகளும்

சிந்தைமகிழ் வுடன்மாசி வீதி — கடந்து
சிங்கார மானசின்னக் கடைத்தெருவிற் சென்று

கிருதமா நதியுங் கடந்து — கந்தன்
கிரிக்கேகும் சாலைவழி கிட்டிநடந் தனரே

மருதநிலந் தனிற்செந்நெல் விளையுஞ் — சாலை
வழியெங்குந் திருக்கண்கள் வைத்ததிரு வழகும்

விண்ணுலவு பசுவின்மலை நாடி — செந்நெல்
விளைவோங்குந் தென்காக்கு ளத்துவழி கூடி

வண்ணமயில் மண்டபஞ் சென்று — குமரன்
மலைகண்டு அருளதிக மாகிநின் ருடி

தேவாதி தேவர்தொழு பாதன் — ஆதி
சிவன்றனக் குபதேசஞ் செய்தகுரு நாதன்

பூபாலனைச் சிறையில் வைத்தோன் — மிக்க
பொழிலிலகுங் கிரியில்வளர் முருகேச னருளால்

கொங்குவங் காளங் கொழும்பு — மிக்க
குடகுமலை யாளமொடு கொல்லங் கலிங்கம்

சிங்களம் கொச்சியாழ்ப் பாணம் — சீன
தேசமொடு கன்னடியர் தேசம்வட காசி

மன்னர்மணி முடியரசர் புகழுஞ் — சோழ
மண்டலமுடன் சேர மண்டலம் முதலாய்

செந்நெல் விளைவாகி முத்தீனும் — பாண்டி
தேசமுதல் தேசாதி தேசத்தி லுள்ள

கற்கண்டுக் காவடிகள் கோடி — மிக்க
கந்தமிகும் ஆவின்பால்க் காவடிகள் கோடி

சர்க்கரைக் காவடிகள் கோடி — மிக்க
சதுரான மச்சக்கா வடிகள்முக் கோடி

வன்னக்கா வடிலக்ஷங் கோடி — வேண்டும்
வரங்கேட்டு வருவார்கள் கோடிமகா — கோடி

அன்னக்கா வடிலக்ஷங் கோடி — குமரன்
அருள்கொண்டு அஷ்டதிசை மட்டும் நின்ருடி

அஷ்டதிசை வரவுகா வடிகள் — ககனம்
அளவுகோ புரவாசல் அன்புடனே கூடி

மட்டுறையும் குழல்வள்ளி பாகன் — வனச
மலரடி பணிந்துகிரி வலமாக நாடி

சரவணையில் தீர்த்தங்க ளாடி — மிக்க
தந்திமுக னருள்மேவு சன்னதியிற் கூடி

பரவியடி தொழுதுநின் ருடப் — பாவம்
பலவினைகள் வாய்விலுரும் பஞ்செனவிண் டோட

வானுறையு முனிவரும் நினருடச் — சாலை
வழியெங்குங் காவடிகள் மகிழ்ந்து கொண்டாட

தேனருவி வயலெங்கு மோட — மிக்க
சேவல்மயி லோடுவரும் பேடைமயி லாட

தவமுனிவர் யாகசா லைகளுந் — தேங்கு
சந்தனமந் தாரமொடு சண்பகச்சோ லைகளும்

அவிரிலகு வனசமலர்த் தடமும் — மலையின்
அடிவாரந் தோறும்அன்ன தானமிடு மடமும்

கனகவொளி ரிலகுமே டைகளும் — தேவ
கன்னியர்கள் நீராடும் கமலஓ டைகளும்

அனவரத முனிவரடி பரவ — மிக்க
அறுமுகன் கிரியைவல மன்புடனே செய்து

குமரனருள் கொண்டு நின்ருடி — இடும்பன்
கோவில்தனை வலஞ்செய்து கொண்டுநின் ருடி

சமரகோ லாகல கெம்பீரன் — இடும்பன்
சன்னதியிற் காவடிகள் தான்செலுத் தினரே

அறுகோண வரையுறையுந் தீரன் — எங்கும்
அணுவிலுய ரணுவான தானகுரு நாதன்

மறைமீதிற் கலதரள வேதன் — சுப்பிர
மண்யமால் பிணிதீர்த்து வரமருளும் நீதன்

மருவுறை கடப்பமலர் மார்பண் — வள்ளி
மனதிற் கிசைந்த மணவாளவொய் யாரன்

அறுமுகவன் மலைவிட் டிறங்க — உம்பர்
அந்தரத்தில் தேவர் துந்துபி முழங்க

ஆனைமேற் பேரியொலி யதிர — முரச
மதிரமதிற் வெடிகளொலி ககனமூக டதிர

வானளவும் வாணங்கள் பொரிய — தீப
வத்திபக வத்தியிரு மருங்கும்நின் றெரிய

சங்குசே கண்டிகள் முழங்க — மிக்க
தரளமணிக் குடைகள்வெஞ் சாமரம் நெருங்க

துங்கமிகு கவிவாணர் பாட — அதிக
துரிதமுட னடியவர்கள் நர்த்தனங்க ளாட

தீபதூ பங்களும் வழங்க — அஷ்ட
திசைதோறும் சரவணப வாவென முழங்க

சரபநுதல் மாதர்நட மாட — வீணை
தம்புருவுடன் தாள சங்கீதம் பாட

வல்லையம் வெள்ளி வலாவும் — ஆல
வட்டமுடன் சக்கரவா ளக்குடை சுருட்டி

முல்லைமல் லிகைமருக் கொழுந்து — பிச்சி
மோகமுறு மிருவாச்சிக் குடைகளும் நெருங்க

பத்தரடி பரவிமலர் சொரிய — மிக்க
பருதிமதி யிருபுரமும் பகலெனவு மெரிய

சுற்றிவரச் சாம்பிராணிப் புகையும் — திவ்ய
தோகைமயில் விசிறிகளும் சூழ்ந்திலங்கி வரவும்

வனசமலர் முகமாறு மிலங்க — மிக்க
வள்ளிதெய் வானையிரு புரமுமருள் பெருக

கனகமயில் மீதேறி வந்து — மனது
களிகூற அனைவோர்க்குங் காக்ஷிகொடுத் தனரே

மூவருடன் முனிவோர்கள் வழி — மிக்க
முப்பத்து முக்கோடி தேவர்களும் வாழி

பாவலர்கள் தமிழென் றும் வாழி — மிக்க
பரராஜ ராச்சியபரி பாலனமும் வாழி

தெள்ளுசதுர் மறைநான்கும் வாழி — மிக்க
தேசங்க ளெங்கும் செழித்தோங்க வாழி

வள்ளிதெய் வானைதொழு தேத்தும் — வெற்றி
வடிவேல னிருசரணம் வாழி வாழியவே.

ஸ்ரீ முருகன் ஆனந்தக்களிப்பு முற்றும்

சுபம்.